*Tiruppukaḻamirtam*
*Malar 11, itaḻ 10*
*January 1947*

Record no. 166

ஓம் குஹாய நம:

# திருப்புகழமிர்தம்



"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"


| மலர் ௰௧ Vol 11 | விய ஷு தை மீ 1 ௳ ஜனவரி 1947 | இதழ் ௰. No 10. |
|---|---|---|


## திருப்புகழ்.

### திருவிடைமருதூர்.

அறுகுநுனி பனியனைய சிறியதுளி பெரியதொரு
ஆக மாகியோர் பால நுபமாய்
அருமதலை குதலைமொழி தனிலுருகி யவநடைய
ஆயி தாதையார் மாய மோகமாய்
அருமையினி லருமையிட மொளுமொளென வுடல்வளர
ஆளு மேளமாய் வால நுபமாய் அவரொரு பெரியோராய்-

அழகுபெறு நடையடைய கிறுதுபடு மொழிபழகி
ஆவி யாயவோர் தேவி மாருமாய்
விழசுவரை யரிவையர்கள் படுகுழியை நிலைமையென
வீடு வாசலாய் மாட கூடமாய்
அணுவளவு தவிடுமிக பிதிரவிட மனமிறுகி
ஆசை யாளராய் ஊசி வாசியாய் அவியுறு சுடர்போலே;

வெறுமிடிய னுருதவசி யழதுபடை யெனுமளவில்
மேலை வீடுகேள் கீழை வீடுகேள்
திடுதிடென நுழைவதன்முன் எதிர்முடுகி யவர்களொடு
சீறி ஞாளிபோல் ஏறி வீழ்வதாய்
விரகினொடு வருபொருள்கள் சுவறியிட மொழியுமொரு
வீணி யார்சொலே மேல தாயிட விதிதனை நினையாதே-

மினுகுமினு கெனுமுடல மறமுறுகி நெகிழ்வுறவும்
வீணர் சேவையே பூணு பாவியாய்
மறுமையுள் தேனுமவரை விடும்விழலை யதனில்வரு
வார்கள் போகுவார் காணு மோஎனு
விடுதுறவு பெரியவரை மறையவரை வெடுவெடென
மேள மேசோலா யாளி வாயராய் மிடையுற வருநாளில்;

வறுமைகளு முடுகிவர வுறுபொருளு நழுவசில
வாத மூலகா மாலை சோகைநோய்
பெருவயிறு வயிறுவலி படுவன்வர இருவிழிகள்
பீளை சாறிடா ஈளை மேலிடா
வழவழென உமிழுமது கொழுகொழென ஒழுகிவிழ
வாடியூனெலாம் நாடிபேதமாய் மனையவள்மனம்வேறாய்-

மறுகமனை யுறுமவர்கள் நணுகுநணு கெனுமளவில்
மாதர் சீயெனு வாலர் சீயெனு
கனவுதனி லிரதமொடு குதிரைவர நெடியசுடு
காடு வாவெனு வீடு போவெனு
வலதழிய விரகழிய வுரைகுழறி விழிசொருகி
வாயு மேலிடா ஆவி போகுநாள் மனிதர்கள் பலபேச;

இறுதியதோ டறுதியென உறவின்முறை கதறியழ
ஏழை மாதரார் மோதி மேல்விழா
எனதுடைமை யெனதடிமை யெனுமறிவு சிறிதுமற
ஈமோ லேலேனு வாயை ஆவெனு
இடுகுபறை சிறுபறைகள் திமிலையொடு தவில்றைய
ஈம தேசமே பேய்கள் சூழ்வதாய் எரிதனி லிடும்வாழ்வே-

இணையடிகள் பரவுமன தடியவர்கள் பெறுவதுவும்
ஏசி டார்களோ பாச நாசனே
இருவினைமலமுமற இறவியொடு பிறவியற
ஏக போகமாய் நீயு நானுமாய்
இறுகும்வகை பரமசுக மதனையரு ளிடைமருதில்
ஏக நாயகா லோக நாயகா. இமையவர் பெருமாளே.

பதவுரை.

இடை மருதில் - திருவிடைமருதூரில் எழுந்தருளியுள்ள, ஏக நாயகா - தனிப்பெருந் தலைவரே! லோக நாயகா - உலகங்கட்



கெல்லாம் முதல்வரே! இமையவர் பெருமாளே - தேவர்களுக் கெல்லாம் தலைவராகிய பெருமையின் மிக்கவரே! அறுகு நுனி பனி அனைய சிறிய துளி - அறுகம்புல்லின்மேலுள்ள பனிபோன்ற மிகவும் சிறிய துளியானது, பெரியது ஒரு ஆகம் ஆகி - பெரிய ஒரு உடம்பாகி, ஓர் பால ரூபம் ஆய் - ஒப்பற்ற குழந்தை வடிவாகி (பிறந்து), அவர் உடைய ஆயி தாதையார் - அக்குழந்தையினுடைய தாயுந்தந்தையும், அருமதலை குதலை மொழி தனில் உருகி - அருமையான குழந்தையின் மழலைச்சொற்களைக் கேட்டு உள்ளம் உருகி, மாய மோகம் ஆய் - மயக்கத்துடன் அக்குழந்தையிடம் மிகுந்த அன்புவைத்து. அருமையினில் அருமை இட - அருமையினும் அருமையாக ஆடை ஆபரணங்களை இட்டு வளர்க்க, மொளுமொளு என உடல் வளர - மொளு மொளு என்று விரைந்து உடலானது வளர்ச்சியுற, ஆளு மேளமாய் - அப்படி வளர்ந்த அந்த ஆள் மேள தாளங்களுடன் கூடி, வால ரூபம் ஆய் - வாலப்பருவத்தையடைந்து, அவர் ஒரு பெரியோர் ஆய் - அந்த மனிதர் ஒரு பெரியமனிதராக விளங்கி, அழகு பெறு நடை அடைய - அழகுமிக்க நடையை யடைந்து, கிறுதுபடு மொழி பழகி - அரட்டலான சொற்களைப் பேசிப் பயின்று, ஆவி ஆய ஓர் தேவி மாரும் ஆய் - உயிருக்கு நிகரான மனைவிகள் பலரையடைந்து, விழு சுவரை - கூரை விழுந்த சுவர் போன்ற இந்த உடம்பையும், அரிவையர்கள் படுகுழியை - பெண்களுடைய அறிவதற்கேதுவான பள்ளத்தையும், நிலைமை என - நிலைபேறுளதென்று எண்ணி, வீடு வாசலாய் மாட கூடமாய் - வீடு வாசல் மாடம் கூடம் ஆகிய இவைகளுடன் கூடி வாழ்ந்து, அணுவளவு தவிடும் இக - அணுவளவு தவிடுதானும் இங்கே, பிதிர விட மனம் இறுகி - சிதறவிடாமற் பாதுகாத்து மனமானது மிகவும் கெட்டித்தன்மையை யடைந்து, ஆசையாளராய் - ஆசையை மிகவும் உடையவராகி, ஊசி வாசி ஆய் - ஊசி நுனியளவு நுட்பமாக வட்டியைக் கணக்கிட்டு வாங்கிச் செல்வத்தைச் சேர்த்து, அவி உறு சுடர் போலே - அணைந்துபோகப் போகின்ற விளக்கைப்போல சுடர்விட்டு எரிந்து, வெறு மிடியன் ஒரு தவசி - ஒன்றுமில்லாத வறுமையாளனாகிய ஒரு தவசீலன், அமுதுபடை எனும் அளவில் - "ஐயா! சிறிது அன்னம் கொடும்" என்று கேட்டவுடனே, மேலை வீடு கேள் - "மேல் வீட்டிற்போய்க் கேளும்", கீழை வீடுகேள் - "கீழ் வீட்டிற்போய்க் கேளும்" என்று கூறியும், திடு திடு என நுழைவதன்முன் - அவ்வறியவன் திடுதிடு என்று சிறிது விரைவாக வாசற்படியேறி பசியைப் பொறுக்க மாட்டாமல் நுழைய முயலுமுன்பாக, எதிர் முடுகி - அவனுக்கு எதிராக விரைந்து சென்று, சீறி ஞாளிபோல் ஏறி வீழ்வது ஆய் - சினந்து நாயைப்போலே அவன்மேல் வீழ்ந்து கடிப்பதுபோல் பேசியும் விரகிலெனுடு வரு பொருள்கள் சுவறி இட

மொழியும் - வஞ்சனை வழியினில் வந்த செல்வமானது வற்றிப் போகுமாறு தீமையான காரியங்களில் செல்லுமாறு கூறும், ஒரு வீணியார் சொல்லே - தனிப்பட்ட வீணர்களாது வெற்றுரைகளே, மேலது ஆய் - மேலான அறவுரைகளாகக்கருதி அதன்படி தீ நெறிகளில் நடந்தும், இடா விதி தனை நினையாதே - ஆன்றோர்கள் "இது இப்படி" என்று வரம்பிட்ட விதிமார்க்கத்தைச் சிறிதும் சிந்தியாமல், மினுகு மினுகு எனும் உடலம் - (வேளை தவறாமல் உண்பதனல்) மினுமினுப்பினையடைந்த சரீரமானது, மற முறுகி - பாவமே முதிர்ந்து, நெகிழ்வுறவும் - தளர்ச்சியடையவும், வீணர் சேவையே பூணு பாவியாய் - வீணான வெற்றர்களைச் சந்திப் பதையே சிறந்தபயனாகக் கருதி புல்லர்களுடன் உறவுசெய்கின்ற பாவியாகி, மறுமை உளது எனும் அவரை - இம்மையிற் செய்த தெல்லாம் மரணத்திற்குப் பின்னும் மறுபிறப்பிலும் வரும் என்று கூறும் நல்லோர்களைப் பார்த்து, விழலை விடும் - "இந்த வீணான சொற்களை விடும்", வருவார்கள் போகுவார் காணுமோ எனு - "வருகின்றவர்களையும் போகின்றவர்களையும் நீர் பார்த்தீரோ" என்று ஏளனமாகப் பேசி, விடுதுறவு பெரியவரை - பந்தபாசங் களை விட்ட துறவிகளாகிய பெரியோர்களையும், மறையவரை - அந்தணர்களையும், வெடு வெடு என மேளமே சொலாய் - வெடு வெடு என்று கடுமையாக மேளம் ஒலிப்பதுபோல் வைது, ஆளி வாயராய் - வீம்பு பேசும் வாயையுடையவராகி, மிடை உற வரும் நாளில் - நெருக்கடியான இடையூறுகள் வரத் தொடங்கிய சமயத்தில், வறுமைகளும் முடுகிவர - தரித்திரங்களானது விரைந்து வரவும், உறு பொருளும் நழுவ - முன் பொருந்தியிருந்த செல்வமெல்லாம் கையை விட்டு நழுவி நீங்கவும், சிலவாதம் - வாதநோய் களிற் சிலவும், ஊது காமாலை - ஊது காமாலையும், சோகைநோய் - சோகை முதலிய நோய்களும் வந்து பீடிக்கவும், பெருவயிறு - வயிறு பெருத்தும், வயிறுவலி - வயிற்றுவலியும், படுவன்வர - ஒருவகையான சிலந்தியும் வந்து சேர, இரு விழிகள் பீளை சாறிடா - இரண்டுகண்களிலும் பீளை வழியவும், ஈளை மேல் இடா - கோழை மேலிடவும், உமிழும் அது - உமிழ்கின்ற எச்சிலானது, வழ வழ என - வழவழ என்றும், கொழ கொழ என - கொழ கொழ என்றும், ஒழுகி விழ - (நாறுபோல்) ஒழுகி (மார்பிலும் மண்ணிலும்) விழவும், ஊன் எலாம் வாடி - சரீரம் முழுவதுஞ் சதைகள் சுருக்கத்தை யடைந்து, நாடி பேதமாய் - வாத பித்த சிலேத்துமம் என்ற மூன்று நாடிகளும் ஒன்றுடன் ஒன்று ஒற்றுமையின்றி விரோதப் பட்டும், மனையவள் மனம் வேறு ஆய் - முன் ஒற்றுமையாயிருந்த இல்லாளுடைய உள்ளம் வேற்றுமையடைய வும், மறுக - உள்ளம் சுழற்சியை யடையவும், மனை உறும் அவர் தள் நணுகு நணுகு எனும் அளவில் - வீட்டின் பக்கமாக வருபவர்



களை வாரும் வாரும் என்று அழைத்தவுடன், மாதர் சீ எனு - பெண்கள் 'சீ விழுந்துகிட' எனவும், வாலர் சீ எனு - வாலிபர்கள் "சீ பேசாமற்கிட" என்றுகூறவும், கனவுதனில் இரதமொடு குதிரைவர - குதிரைகள் பூட்டிய தேர் வந்து தன்னையழைப்பது போன்ற கனவுகள் கண்டும், சுடு காடு வா எனு - சுடுகின்றவன மாகிய ஈமதேயம் 'அப்பா! உனது ஆட்டம் முடிந்துவிட்டது என்னிடத்திற்கு வா' என்று அழைக்கவும் வீடு போ எனு - 'கிழவா! உனது நாள் முடிந்து விட்டது இதைவிட்டு விரைந்துபோ" என்று விரட்டவும், வலது அழிய - வல்லமை ஒழியவும், விரகு அழிய - உபாயங்கள் நீங்கவும், உரை குழறி - சொற்கள் குழறவும், விழி சொருகி - கண்கள் சொருகவும், வாயு மேல் இடா - பிராண வாயுவானது மேல் மேல் விசைந்து எழவும், ஆவி போகும் நாள் - உயிர் பிரிகின்ற அந்நாளில், மனிதர்கள் பல பேச - சுற்றியிருக்கின்ற மனிதர்கள் தத்தம் கருத்திற்கிசைந்தவாறு பலப்பல பொருள்கள் பற்றிப் பேசவும், இறுதி அதோடு அறுதி என - முடிவுபெற்ற அத்துடன் மரணம் வந்துவிட்டதென்று பதறி, உறவின் முறை கதறி அழ - சுற்றத்தார்கள் ஓ வென்று ஓலமிட்டு அழவும், ஏழை மாதராள் - பெண்பாலாகிய மனைவி, மோதி மேல் விழா - மார்பில் அறைந்து கொண்டு மேல் விழுந்து அழவும், எனது உடைமை - இவைகள் என்னுடைய சொத்துக்கள்; எனது அடிமை - இவர்கள் என்னுடைய அடிமைகள்; எனும் அறிவு சிறிதும் அற - என்று எண்ணி மகிழ்ந்த அறிவானது ஒரு சிறிதும் இல்லாமல் நீங்கவும், (மரணப் படுக்கையில் படுத்திருக்கும் அப் பிணத்தின் வாயில்) ஈ மொலேல் எனு - மொலேல் என்று ஈக்கள் மொய்க்கவும், வாயை ஆவெனு - ஆ வென்று வாய் அகன்று கிடக்கவும், இடுகு பறை சிறு பறைகள் - ஒடுக்கமான பறைகள் சிறிய பறைகள், திமிலை யொடு தவில் அறைய - பம்பையுடன் தவில் என்ற பறையும் ஒலிக்கவும், ஈமதேசமே பேய்கள் சூழ்வதாய் - சுடுகாட்டிற்குப் பேய்கள் சூழக் கொண்டுபோய், எரிதனில் இடு வாழ்வே - நெருப்பில் போட்டு கொளுத்துகின்ற வாழ்வே யாகும்; (இத்தகைய நிலையை) இணையடிகள் பரவும் - தேவரீருடைய இரண்டு திருவடிகளையும் துதிக்கின்ற, அடியவர்கள் பெறுவதுவும் - சிறந்த அடியார்கள் பெறுவார்களாயின், ஏசிடார்களோ - தேவரீரை நிந்திக்கமாட்டார்களோ? பாசநாசனே - பாசத்தைக் கெடுப்பவரே! இருவினை - நல்வினை தீவினைகளும், மும்மலமும் அற - ஆணவம் கன்மம் மாயை என்ற மூன்று மலங்களும் அற்றுப் போகவும், இறவியொடு பிறவி அற - இறப்பும் பிறப்பும் இல்லாமல் தொலையவும், நீயும் நானுமாய் - தேவரீரும் அடியேனும், ஏக போகமாய் இருகும் வகை - ஒன்றுபட்டு அத்துவிதமாகக் கலக்கும் வகையான, பரம சுகம் அதனை அருள் - பேரின்பப் பெருவாழ்வை அருள்புரிவீர்,

போழிப்புரை

திருவிடைமருதூரில் எழுந்தருளியுள்ள தனிப்பெருந் தலைவரே! உலகங்கட்கெல்லாம் முதல்வரே! தேவர் யாவருக்கும் அதிபரே! அறுகம்புல்லின் மேல் உள்ள பனித்துளியளவான சிறிய விந்துவின் துளியானது, தாய்க்கருவடைந்து, ஒரு பெரிய உடம்பாகிக் குழந்தைவடிவுற்றுப் பிறந்து, அக் குழந்தை பேசும் மழலைமொழிகளைக் கேட்டு உருகிய தாய்தந்தையர் அக் குழவியின்மீது மயக்கமுற்று அன்பு வைத்து அருமையினும் அருமையான ஆடை ஆபரணங்களால் அலங்கரித்து இனிது வளர்க்க, விரைந்து உடல் வளர்ந்து, மேளதாளங்களுடன் கூடி ஒரு பெரியமனிதனாகி, அழகிய நடையுடன் நடந்து, அரட்டல்சொற்களைப் பழகி, உயிருக்குயிராகிய பலபெண்களுடன் புணர்ந்து, இடிசுவர் போன்ற இந்த உடம்பையும் அழிவதற்கேதுவாகிய பெண்களது படுபள்ளத்தையும் நிலைபேருக எண்ணி, வீடு வாசல் மாடம் கூடம் முதலியவைகளுடன் வாழ்ந்து, தவிடுகூட அணுவளவும் சிதறிவிடாமற்படிக்குப் பாதுகாத்து, நுட்பமாகக் கணக்குப்பார்த்து வட்டிமேல் வட்டி வாங்கி, அணைந்துபோகின்ற விளக்குப்போல் சுடர்விட்டு எரிந்து, ஒன்றுமில்லாத வெறுந் தரித்திரநிலையையடைந்த ஒருதவசி வந்து "ஐயா! சிறிது அன்னமிடும்" என்று கேட்டவுடன், "மேல்வீட்டில் கேளும், கீழ்வீட்டில் கேளும்" என்று கூறியும், அவ் வறியவன் (ஐயா! என்று கூறி) உள்ளே நுழைய முயலுமுன், அவனுக்கு எதிரில் முடுகிச்சென்று சினந்து நாய்போல் குரைத்து அவன்மீது வீழ்ந்து அவனை விரட்டியடித்தும், வஞ்சனைவழியில் வந்த செல்வமானது அழிந்து போகுமாறு கூறும் புல்லர்களது தீய சொற்களைத் தூய சொற்களாகக்கொண்டு, ஆன்றோர்கள் விதித்த அறநெறியைச் சிறிதும் எண்ணுமல் செருக்கி இருந்தும், மினுமினுப்பாக இருந்த உடம்பு பாவமே மிகுந்து தளர்ச்சியுறவும், வீணர்களது சந்திப்பையே பெரிதும் விரும்புகின்ற பாவியாகியும், யாராவது நல்லோர்கள் "ஐயா! இம்மையிற் செய்தது மறுமையில் வரும்; 'முற்பகல் செய்யில் பிற்பகல் விளையும்'" என்று கூறினுல், ஓய்! "இம்மாதிரியான வீண்



வார்த்தைகளை இனி இங்கே கூறுதேயும்; வருவதையும் போவதையும் யாருங்காணும் பார்த்தது?" என்று ஏளனம் புரிந்தும், பாசபந்தங்களை விட்ட துறவிகளையும் அந்தணர்களையும் வெடுவெடு என்று மேளம்போல் ஏளனமாகப் பேசியும், வம்புரைபகரும் வாயராகியுங் காலத்தைக்கழிக்க, நெருக்கடி வரும் சமயத்தில், தரித்திரங்கள் விரைந்து வரவும், கையில் இருந்த பொருள்கள் நழுவவும், வாதம் ஊது காமாலை சோகை பெருவயிறு வயிற்றுவலி படுவன் முதலிய பிணிகள் வந்து துன்புறுத்தவும், இரண்டு கண்களிலும் பீளை வடியவும், ஈளை மேலிடவும், வாயிலிருந்து எச்சில் வழவழ என்றும் கொழகொழ என்றும் ஒழுகிவிழவும், உடம்பிலுள்ள சதை வற்றிச் சுருக்கத்தை யடையவும், வாதபித்தசிலேத்மமாகிய நாடிகள் தம்முள் ஒற்றுமையின்றி பேதப்பட்டும், முன் மனமொத்திருந்த மனைவியின் மனம் வேறுபடவும், உள்ளம் சுழற்சியை யடையவும், வீட்டினருகில் வருபவரை அக்கிழவர் "வாரும்வாரும்" என்றழைத்தவுடன், மாதர்களும்வாலிபர்களும் "சீசீ! பேசாமல் வாயை மூடிக்கொண்டு முடங்கிக்கிட" என்று சீறவும், குதிரைகள்பூட்டிய தேர்ஒன்று வந்து தெருவில் தன் வீட்டின் எதிரில் நின்று தன்னை யழைப்பதுபோன்ற கனுக்கள் வரவும், சுடுகாடு வா என்று அழைக்கவும், வாழ்ந்திருந்த வீடு போ என்று விரட்டவும், வலிமையும் உபாயமும் அழிந்தொழியவும், சொற்கள் குழறவும், கண்கள் சொருகவும், பிராணவாயு மேலிடவும், உயிர் பிரியுங்கால் அருகிலிருந்து மனிதர்கள் தத்தம் கருத்துக்கிசைந்தவாறு பலப்பல பேசவும், "இத்துடன் மரணம் வந்ததோ" என்று உறவினர் சுற்றியிருந்து கதறி அழவும், மனைவியானவள் மார்பில் அறைந்துகொண்டு மேல்வீழ்ந்து அழவும், "இவைகள் எனது உடைமை", "இவர்கள் எனது அடிமைகள்" என்று எண்ணிய எண்ணங்கள் சிறிதுமின்றிப் பிணமாகி மரணப் படுக்கையில் படுத்திருக்கும் அவ் வுடம்பின் வாயில் ஈக்கள் மொய்க்கவும், ஆவென்று வாய் திறந்திருக்கவும், இடுகு பறை, சிறுபறை, பம்பை, தவில் முதலிய பறைகளை வாசித்து ஈமதேயத்திற் கொண்டுபோய் பேய்கள் சூழ

நெருப்பிலிட்டு கொளுத்திவிடுவார்கள்; (இதுதான்வாழ்ந்த வாழ்வின் முடிவு;) பாசநாசனே! இந்த வண்ணமாக உனது திருவடிகளைப்பரவி வழிபாடுசெய்யும் மெய்யடியார்களது வாழ்வும் முடியுமானால் உனது கருணைத் திறத்தையும் உன்னையும் அறிஞர்கள் பழிப்பார்கள்; ஆதலினால் இருவினைகளும் மும்மலங்களும் இறப்பும் பிறப்பும் ஒழிய, அடியேனும் தேவரீரும் ஏகபோகமாய் இரண்டறக் கலந்து பேரின்பமெய்த அடியேனுக்கு அருள் புரிவீர்.

## விரிவுரை.

அறுதநுனி பனியனைய சிறியதுளி:—

ஆன்மாவானது நல்வினை தீவினைக்கீடாக சுவர்க்க நரகங்களினால் இன்ப துன்பங்களைத் துய்த்து, விண்ணிருந்து மழைவழியாக இம் மண்ணுலக மெய்தி, காய்கனி தானியங்களிற் கலந்து, ஆடவனிடஞ் சேர்கின்றது. அங்ஙனம் சேர்ந்தஆன்மா இருதிங்கள் தந்தையிடமிருந்து, தாயின் கருவில் எய்துகின்றது. அங்ஙனம் எய்தும் போது அதன் வடிவம் அறுகின்புல்லின் மீதுள்ள பனித்துளி போன்ற சிறிய அளவேயாகும். அத்துணைச்சிறிய அளவாக இருந்த ஒன்று இத்துணைப் பெரிய உடம்பாக ஆகின்றது.

"பனியின் விந்துளி போலவே கருவி னுறும்" —திருப்புகழ்.

அருமதலை குதலைமொழி தனிலுருகி யவருடைய
ஆயிதாதையார் மாயமோகமாய்:—

குழந்தைகள் பேசும் இனிய மொழி கனியமுதினும் சுவையுடையது.

"குழலினி தியாழினி தென்பதம் மக்கள்
மழலைச்சொற் கேளா தவர்."

என்பர் திருவள்ளுவதேவர்.

குழறிக் குழறிக் கூறும் மழலை மொழியால் உருகாதார் யாவர்? ஆதலின் தாய்தந்தையர் மழலை மொழியால் உருகி அன்பு பெருகி அம் மகவை நிரம்ப ஆடையாபரணங்களால் அலங்கரித்து மகிழ்வர்.



அருமையினி லருமையிட மோருமோரெனை உடல்வளர
ஆளுமேளமாய் வாலருமாய் அவரோரு பேரியோராய்:—

குழந்தையை மிக்க அருமையாக சிறந்த உணவுகளை நல்கி நாளும் நன்கு வளர்க்க, அக்குழந்தையின் உடம்பு மிகவிரைவாக வளர்ந்தது; அக்குழந்தை மேள தாளத்துடன் ஓங்கி பெரிய மனிதனாகிவிட்டனன்.

அழகுபெறு நடையடைய கிறுதுபடு மொழிபழகி
ஆவியாயவோர் தேவிமாருமாய்:—

இளமை முறுக்கினால் வீதிகளில் அழகாக நடந்தும், தன்னொத்த இளைஞர்களோடு கிண்டலும் கிறுதுமாக அரட்டல் மொழிகளைப் பேசியும், காமாதுரனாகிப் பல பெண்களுடன் கூடி தடுமாறலானான்.

தேவி என்று ஒருமையில் கூறாமல் தேவிமார் என்று பன்மையாகக் கூறியது சிந்தித்தற்குரியது.

விழுசுவரை:—

மேல்கூரை விழுந்த சுவர்போலே பயனின்றி நிற்பதனால் இவ்வுடம்பை சுவர் என்றனர். உவம ஆகு பெயராக உடம்பெனப் பொருள் செய்யப் பெற்றது.

நிலைமையென வீடுவாசலாய் மாடகூடமாய்:—

நிலையில்லாத பொருள்களை யெல்லாம் நிலையுடையவையாக எண்ணி மயங்கி யிருப்பர். ஆடம்பரமாக பெரிய மாடிவீடும் மாடு கன்று ஆள் அடிமை ஆகிய இவைகளுடன் வாழ்ந்து மகிழ்வர்.

அணுவளவு தவிடுமிக பிதிரவிட மனமிறுகி
ஆசையாளராய் ஊசிவாசியாய்:—

தவிடும் இக எனப் பிரிக்கப்பட்டது. உம்மை இழிவு சிறப்பு. இக - இவ்வுலகில் எனப் பொருள் செய்யப்பட்டது. தவிடு மிக எனப் பிரித்துக்கொண்டால் தவிடு மிகவும் எனப் பொருள்படும். தவிடுமிகள் என்று பாடமிருக்குமாயின் தவிடு உமிகள் என்று பொருளாகும்.

தவிடுகூட சிதறவிடாமற்படிக்கு அத்துணை கெட்டியாக மனம் இறுகி ஆசைவயத்தராவர்.

"தவிடு ஈறப்பதமெனினுமேற்பவர் தாழாதீயேன்"

என்பார் வேறு ஒரு திருப்புகழில்.

"சிறுமிக்குமர நிகர்வீர் பகிர"

("சிறிய உமியைக்கூட பிறருக்கிட்டு உண்ணமனமில்லாமல பரம் போன்றிருப்பவரே") என்பார் கந்தரந்தாதியில்.

ஆசைவயத்தராகி அத்துணை அழுத்தத்துடன் இருப்பர்.

வாசி - வட்டிமேல் வாங்கும் பணம். ஊசியின் நுனியளவுகூட விடாமல் அவ்வளவு நுட்பமாகக் கணக்குப் பார்த்து வட்டிமேல் வட்டி வாங்கிப் பொருள் சேர்ப்பர்.

ஊசி வாசியாய் என்பதற்கு "ஊசிபோன இடத்தைத் தேடுபவரைப்போலே பணந்தேடி" எனப் பொருள் கொள்வாருமுளர்.

அவியுறு சுடர்போலே:—

அணைந்துபோகின்ற விளக்கு திரிமுழுவதும் பற்றிக் கொண்டு அதிகமாகச் சுடர்விட்டு எரிந்து அணைந்துவிடும். அதுபோலே அளவுக்கு மீறிய ஆடம்பரமாக தன்னிலைமீறி நடப்பர்.

இனி அவியுறுசுடர்போலே என்பதனைப் பின்னே வருகின்ற வெறுமிடியன் என்ற சொற்றொடரோடு சேர்த்து, "அணைந்துபோகின்ற விளக்கைப்போல துடிதுடித்துக் கொண்டு உணவை நாடிவருகின்ற இரவலன்" எனினும் பொருந்தும்.

வெறுமிடிய னொருதவசி யழதுபடை யெனுமளவில்
மேலைவீடுகேள் கீழைவீடுகேள்:—

ஒரு பற்றுக்கோடுமில்லாத தரித்திரன் என்பதனை உணர்த்த 'வெறுமிடியன்' என்றனர்.

மிடியுடையவன்மட்டுமன்று; தவஞ்செய்பவன் என்பதனையும் உணர்த்த 'ஒருதவசி' என்றனர். இத்தகைய ஒரு இரவலன் வந்து "ஐயா! சிறிது அன்னம் படையும்" என்று கேட்டவுடன், மிகவும் தாராளமாக 'மேல்வீட்டிற்போய்க் கேள்', 'கீழ்வீட்டிற்போய்க் கேள்' என்று கூறி அவனை விரட்டியடிப்பர்.

திடுதிடென நுழைவதன்முன் எதிர்முடுகி அவர்களோடு
சீறிநாயிபோல் ஏறிவிழ்வதாய்:—

அவ் விரவலன் பசி பொறுக்கமாட்டாமல் "ஐயா! எல்லா இடங்களிலும் கேட்டேன்; ஒன்றும் கிடைக்கவில்லை. ஏதாவது கொடும்" என்று கூறி சிறிது படியேறி வீட்டிற்குள் நுழைய முயலுமுன்; அவனது எதிரில் முடுகிப்போய், நாய்போற் சீறிவிழுந்து விரட்டியடிப்பர்.

விரகிெனாடு வருபொருள்கள் சுவறியிட மொழியுமொரு
வீணியார்சொலே மேல்தாய்:—

விரகு - வஞ்சனை; வஞ்சனைவழியில்வந்த பொருள் விரைவில் கெடும்.

அழக் கொண்ட வெல்லாம் அழப்போம் இழப்பினும்
பிற்பயக்கும் நற்பாலவை. —திருக்குறள்.

அவ்வாறு பொருள் கேடுறுதற்குச் சில துன்மந்திரிகள் சேர்வர். அறஞ் சிறிதுஞ் செய்யாத அம் மதியிலிதன் செல்வம் அழிய வழக்குக்கும் வம்புக்கும் பரத்தையர்க்கும் குடிக்கும் பிற தீமைகளுக்குமாக செலவுகள் இழுத்துவிடுவர். அவர்கள் சொற்கள் அவனுக்கு அப்போது கரும்பாக இனிக்கும்.

விதிதனை நினையாதே:—

பெரியோர்கள் விதித்த செய்வன இவை; தவிர்வன இவை என நினைந்துபாராமல் மனம்போன போக்கிற் போய்க் கெடுவர்.

மினுமினுகெனுமுடல் மறமுறுகி நெகிழ்வுறவும்
வீணர்சேவையே பூணுபாவியாய்:—

காலந்தவறாமலும், விரதம் முதலியவைகளின்றியும், கதவடைத்துக்கொண்டு சுவையுள்ளவைகளை வயிறு புடைக்க விலாப்புடைக்கத் தின்று உடலை வளர்ப்பதனால், அவ் வுடம்பு மினுமினு என்று விளக்கெண்ணெய் தடவப் பெற்றதுபோல் பளபளப்புடையதாகியது. அன்றியும் நல்லோர்கள் நட்பு கொள்ளாமல் வீணர்களுடன்கூடி சல்லாபம் புரிந்து மகிழ்வர்.

மறுமையுளதெனுமவரை விடும்விழலை யதனில்வரு
வார்கள் போகுவார் காணுமோ எனு:—

யாதாமொரு பெரியவர்கள்வந்து "அப்பனே! இப்படி நன்மை தீமையின்றி நடவாதே; இம்மையிற்செய்தது மறுமைக்கு வரும்; தீவினை உருத்துவந்து ஊட்டும். ஆதலின் நல்வழியில் நடப்பாய்" என்று கூறினால், 'ஓய்! உளறுதீர்; புண்ணியம் பாவம் சிவப்பா? கறுப்பா? யாருங்காணும் பார்த்தது? மறுபிறப்பு உண்டென உமக்கு யாருங்காணும்

சொன்னது? இந்த வீண்வார்த்தைகளையெல்லாம் விட்டுத் தொலையும்; இந்த வெறுங்கட்டுகளை நம்புகின்றஆள் நான் அன்று" என்று இவ்வகையாக ஏளனமாகப் பேசுவர்.

விடுதுறவு பெரியவரை மறையவரை வெடுவெடேன
மேளமே சோலாய் ஆளிவாயராய் —

பாசபந்தங்களைவிட்ட பெரியவர்களையும், வேதங்களை யோதும் அந்தணர்களையும் வெடுவெடுஎன்று வசவுமொழி களைக்கூறி மேளம்போல் பரிகசிப்பர் ஆதாளிவாயர்-வீம்பு பேச்சு பேசுபவர். இடைக்குறையாக ஆளிவாயர் என வந்தது.

"அகதியை மறவனை ஆதாளிவாயனை" —திருப்புகழ்.
"ஆதாளியை யொன்றறியேனை" —அநுபூதி.

மிடையுற வருநாளில்:—

மிடை - நெருக்கம். மேற்கூறியபடி பலப்பல துர்க் குணக்களஞ்சியமாக வாழ்ந்த மனிதனுக்குப் பொழுது திரும்பி பலப்பல நெருக்கடிகள் வந்துசேரத் தொடங்கின.

வறுமைகளும் மூடுகிவர உறுபொருளும் நழுவ:—

வறுமைகள் என்று பன்மையாகக் கூறியது சிந்தனைக் குரியது. செல்வம் பலவகைப்படும். பொருட்செல்வம்; சொற்செல்வம்; செவிச்செல்வம்; கலைச்செல்வம்; மக்கட் செல்வம் முதலியன்வாம். இத்தகைய எல்லாச் செல்வங்க ளும் குறைந்து மிடியேற்பட்டது.

சில வாதம் ஊதுகாமாலை ............ படுவன்வர:—

வறுமை முதலிய துன்பத்துடன் பலவகையான நோய் களும்வந்து துன்புறுத்துகின்றன. படுவன்-ஓர்வகை நோய்.

மனையுறுமவர்கள் நணுதநணுகேனுமளவில்
மாதர் சீஎனு வாலர் சீஎனு:—

கிழவர் ஒரு பழம்பாயும் நோயும் கிழிந்த தலையணையும் எச்சில்உமிழ வறட்டியும் சாம்பலும் ஒரு தடியுமாக இருப் பர்; அவரோடு ஒருவரும் பேச ஒருப்படார்கள்; உலகச் செய்தியும் அவருக்கு ஒன்றுந் தெரிந்துகொள்ள அனுகூல மிராது; தெரிந்துகொள்ள அவருக்கு அவா மிகுதியுமுண்டு; யாராவது தன்னுடன் பேசமாட்டார்களா? என்று எதிர் பார்ப்பார். தமது வீட்டின்அருகில் யாராவது செல்வார்க ளாயின், "ஆரங்கே? அப்பா! இப்படி வந்துபோயேன்"



என்று அழைப்பர். அங்ஙனம் அழைத்தவுடன் வீட்டி லுள்ள மாதர்களும் வாலிபர்களும் 'சீ! சீ! பேசாமறகிட" என்று ஏசுவர்.

கனவுதனி லிரதமோடு குதிரைவர நேடியசுடு
காடு வாவேனு வீடு போவேனு:—

பெரியகுதிரைகள் பூட்டிய தேர்வந்து தன்வீட்டின் எதிரில் நின்று இவரை அழைப்பதுபோலவும், தன்னைப் பலர் விரட்டுவதுபோலவும் கனவு வரும்.

சுடுகாடு வாவெனவும், ஒருவரையும் நிழலுக்கு ஒதுங்க விடாமல் விரட்டி மிகவும் பாதுகாத்துவைத்த வீடு போ வெனவும் கூறுகிற்பர்.

மனிதர்கள் பலபேச:—

மேல்சுவாசங்கண்டு ஆவிபிரியுந் தருணத்தில் அவரைக் காணவந்தவர்கள், வீட்டிலுந் திண்ணையிலும் நடையிலு மாக இருந்து பலப்பல கருத்துப்படப் பேசுவர். ஒருவர், "இனி தேறாது" என்பர். ஒருவர். "இதற்குள் போகாது; இன்னும் சிலகாலம் இருந்து செய்த பாவங்களையெல்லாம் அநுபவிப்பன்" என்பர். ஒருவர், "எச்சிற்கையில் காக்கை ஓட்டாத பாவி; என்னகொண்டுபோகப்போகிறான்; எல்லா வற்றையும் வைத்துவிட்டுதான் போகின்றான்; அரைநாண் கூட அவனுடன் போகாது" என்பர். சிலர், "ஒருவர்சொத் துக்கும் ஆசைப்படமாட்டான்; அவனுடைய சொத்தை யும் ஒருவனுக்குத் தரமாட்டான்; அவன்வரை செட்டாக இருந்தான்; போய்விட்டான்" என்பர். சிலர், "இன்னும் கொஞ்சகாலம் இருந்திருக்கலாம்" என்பர்.

இறுதியதோடறுதியேன............எரிதனில் இடும்வாழ்வே:—

'இதுதான் முடிவு' என்று உறவினர் சுற்றியழுவர்; மனைவி மார்பின்மீதுமோதி மேல்வீழ்ந்து அழுவள். 'இவை எனது உடைமை; இவர் எனது அடிமை' என்று இறு மாந்திருந்த எண்ணங்கள் ஒருசிறிதும்இன்றி நீங்கும். வாய் திறந்து விகாரமாக இருக்கும். திறந்தவாயில் ஈக்கள் வந்து மொய்க்கும்; பலவிதமான பறைகள் ஒலிக்க ஈமதேயத்திற் குக் கொண்டுபோய் எரியிலிட்டு சாம்பராக்குவர்.

இவ்வளவுதான் மனிதனுடைய வாழ்வு; முடிசார்ந்த மன்னரும் முடிவில் ஒரு பிடிசாம்பராவர்.

"ஒருபிடி சாம்பருங் காணுது மாய உடம்பிதுவே"

அறுகுநுனிபனியளவாயிருந்த ஒன்று உருவாகி இடையில் இத்தனை நாடகம்ஆடி முடிவில் ஒன்றுமின்றி அருவாகி மறைந்தொழிந்து மறுபிறப்பு எடுக்க நீங்கிவிட்டது.

இணையடிகள் பரவுமுன தடியவர்கள் பெறுவதுவும்
ஏசிடார்களோ பாசநாசனே:—

மேலேகூறிய எரியிலிடும்வாழ்வு முருகனடியார்கட்கு உண்டாகாது. எம்பெருமானுடைய திருவடிகள் இரண்டையும் இடையறாது பரவி வழிபடும் அடியார்கள் ஏனைய மனிதர்களைப்போல வறிதே இறந்துபட்டு அவர்களது உடம்பை எரிப்பார்களாயின் அந்தஇழிவு இறைவனையே சேரும். ஆதலினால் "ஏசிடார்களோ" என்று அடிகள் கூறுகின்றனர். அடியார்களுக்கு எய்தும் இகழும் புகழும் இறைவனையே சேரும்.

நானிலத்தோர் முன்னே நலனிழந்து நானிருந்தால்
கான நறும்பூங் களவீச—ஈனமுரைத்
தென்னைச் சிரிப்பாரென் றெண்ணுதே எம்பெருமான்
உன்னைச் சிரிப்பாரும் உண்டு. —அதிவீரராமபாண்டியர்.

'பெறுவதுவும்' என்றதில்உள்ள உம்மை எதிர்மறை.

"கூகா என என்கிளை கூடியழப்
போகா வகை மெய்ப் பொருள் பேசியவா"

என்று கந்தரநுபூதியில் அடிகள் தனக்குக்கிடைத்த அரும் பெரும் நிலையை வியந்து கூறுமாறு காண்க.

இருவினை மு மலமற இறவியோடு பிறவியற:—

பிறவாமைக்குக் காரணங்கள் இருவினையொப்பும் மலபரிபாகமுமாம்.

இருவினை யொத்திட இன்னருட் சத்தி
மருவிட ஞானத்தி லாதன மன்னிக்
குருவினைக் கொண்டருட் சத்திமுன் கூட்டிப்
பெருமல நீக்கிப் பிறவாமை சுத்தமே. —திருமூலர்.

நல்வினை தீவினை என்ற இருவினைகளும் ஒப்புவந்த போது, ஆணவம் கன்மம் மாயை என்ற மும்மலங்களும் விலகும். அப்போது சத்திநிபாதம் எய்தும். அங்ஙனம் அருள்பதிந்த பின் ஆன்மா பதியுடன் ஒன்றுபடும்.

ஏகபோகமாய் நீயுநானுமாய்
இறுதும்வகை பரமசுக மதனையருள்:—

ஆன்மா இறைவனுடன் இரண்டறக் கலத்தலே அத்துவித முத்தியாகும். கட்டையில் தீயும், தீயில் நீரும், தேனில் சுவையும், மலரில் மணமும், வானில் வளியும், கண்ணில் ஒளியும் போல் ஆன்மா பதியுடன் அத்துவிதமாகும்.



இந்தனத்தில் அங்கி எரியுறுநீர் தேனிரதங்
கந்தமலர்ப் போதுவான் காலொளிகண்—சந்ததமும்
அத்துவித மாவதுபோல் ஆன்மாவும் ஈசனுமாய்
முத்தியிலே நிற்கு முறை. —சிவபோகசாரம்.

முத்தியைப் பலர் பலவாறு கூறியுழலுவர்; சிவ சமவாதம், ஐக்கியவாதம் முதலியபல பேதங்கள் உள. அவைகளையெல்லாம் நெறி செய்து அடிகள் கூறிய முத்தியை அடியில் வரும் முத்தி நிச்சயத் திருவெண்பாவால் அறிந்து தெளிந்து உறுதியும் உய்வும் பெறுக.

உள்ளமல நீங்கி யோங்கு சிவானந்த
வெள்ளந் திளைத்ததுவாய் மேவுதலே—கள்ளவிழ்பூங்
கொத்தார் விரிசடையார் கூறு சிவாகமத்திற்
சித்தாந்த முத்தியெனத் தேறு.

ஆன்மா தனது சத்திநிரோதமான ஆணவமல முதலானவற்றை நீங்கி, ஒருகாலத்துங் குறைவில்லாத சிவானந்தப் பெருங்கடலில் திளைத்து, அச் சிவமும் ஆன்மாவும் ஒன்றென்றும் இரண்டென்றும் பிரித்தறியமாட்டாத அத்துவித நிலையைப் பெறுதலே, தேன் ஒழுகும் ஆத்திப்பூமாலையை யணிந்த விரிசடை விமலன் திருவாய் மலர்ந்தருளிய சிவாகமத்திற்கூறும் சித்தாந்த முத்தியெனத் தெளிவாயாக. இதனைப்பட்டினத்தடிகளும் கூறுமாறு காண்க.

பூதமுங் கரணமும் பொறிகளும் புலனும்
பொருந்திய குணங்களோர் மூன்றும்
நாதமுங் கடந்த வெளியிலே நீயும்
நானுமாய் நிற்குநாள் உளதோ
வாதமுஞ் சமய பேதமுங் கடந்த
மனோலய இன்ப சாகரமே
ஏதுமொன் றறியேன் யாதுநின்செயலே
இறைவனே ஏக நாயகனே.

ஆன்மா பதியுடன் பொருந்தும்போது உண்டாகும் இன்பத்திற்கு இணை வேறு எதுவுமில்லை. ஆதலினால் அதுவே பரமசுகமாம். ஏனைய சுகங்களெல்லாம் சிறிது போது மின்னலைப் போல் மறைந்தொழிபவைகளாகும்.

தண்ணமுத மதிகுளிர்ந்த கிரணம் வீசத்
தடம்பொழிற்பூ மணம்வீசத் தென்றல் வீச
எண்ணமுதப் பளிக்குநிலா முற்றத் தேஇன்
னிசைவீசத் தண்பனிநீ ரெடுத்துவீசப்

பெண்ணமுத மனையவர் விண்ணமுத மூட்டப்
பெறுகின்ற சுகமனைத்தும் பிற்பட்டோடக்
கண்ணமுதத் துடம்புயிர்மற் றனைத்து மின்பங்
கலந்துகொளத் தருங்கருணைக் கடவுட்டேவே.
—இராமலிங்கஅடிகள்.

அந்த இன்பமெய்தியவர்க்கு ஏனைய இன்பமெல்லாங் கசந்து போகும்.

கரும்புந் தேனுங் கலந்ததோர் காயத்தில்
அரும்புங் கந்தமு மாகிய ஆனந்தம்
விரும்பியே யுள்ளம் வெளியுறக் கண்டபின்
கரும்புங் கைத்தது தேனும் புளித்ததே. —திருமந்திரம்.

இடைமருத:—

திருவிடைமருதூர் ஒரு சிறந்த திருத்தலம். வடக்கே கர்நூல் ஜில்லாவில் மல்லிகார்ஜுனம்; தெற்கே திருநெல்வேலி ஜில்லாவில் ஸ்புடார்ஜுனம்; இதுமத்தியில் விளங்குவதால் மத்யார்ஜுனம். அர்ஜுனம் - மருது.

மல்லிகை மருது, புடைமருது, இடைமருது. மருத மரத்தின் கீழ் பெருமான் எழுந்தருளியுள்ளனர். மஹாலிங்கேசுரர்.

சோழநாடே ஒரு பெரிய சிவாலயம்.

| | | |
|---|---|---|
| திருவிடைமருதூர் | | — கருப்பக்கிரகம். |
| தென் மேற்கில் | திருவலஞ்சுழி | — விநாயகர் |
| மேற்கில | சுவாமிமலை | — முருகர் |
| வடக்கில் | ஆப்பாடி | — சண்டேசர் |
| வடகிழக்கில் (சூரியனார்கோயில்) | மாந்துறை | —சூரியர் |
| வடகிழக்கில் | சிதம்பரம் | — நடராஜர் |
| வடகிழக்கில் | சீகாழி | — வைரவர் |
| கிழக்கில் | திருவாவடுதுறை | — நந்தீசர் |
| தென் கிழக்கில் | திருவாரூர் | — சோமாஸ்கந்தர் |
| தெற்கில் | ஆலங்குடி | — தட்சிணாமூர்த்தி |

இத்தகைய பெரிய கோயிலின் கருப்பக்கிரகம் திருவிடைமருதூர்.

... ... ... ... ... ... ... "ஒப்பேதும்
இல்லா வலஞ்சுழியே ஏரம்பன் வைப்பாக
மல்லே ரகமுருகன் வைப்பாக—நல்லார்சேர்
தண்மாட வாப்பாடி தண்டீசன் வைப்பாக
வண்மாந்துறை இரவி வைப்பாக—எண்மாரு





நன்காமர் தில்லை நடராஜன் வைப்பாக
மன்காழி யேவடுகன் வைப்பாக—முன்கானுந்
தென்னு வடுதுறையூர் சேவமர்வைப் பாவாரூர்
மன்னுசோ மாக்கந்தர் வைப்பாக—உன்னில்
தடைதவிரா லங்குடியா சாரியன் வைப்பாக
இடைமருதில் வீற்றிருக்கும் ஈசன்."
—திருவிடைமருதூருலா.

வரகுண தேவருக்கு பிரமகத்தி நீங்கிய நற்றலம். பட்டினத்தடிகளும் பத்திரகிரியாரும் வைகிய திருத்தலம்.

கனியினும் கட்டி பட்ட கரும்பினும்
பனிமலர்க் குழல் பாவை நல்லாரினும்
தனிமுடி கவித் தாளு மரசினும்
இனியன் றன்னடைந் தார்க்கிடை மருதனே.

என்று அப்பர் சுவாமிகளால் இனிது பாடப்பெற்ற அருமைத்தலம்.

இத்தலத்தைக் குறித்துத் திருவெண்காடர் திருவாய் மலர்ந்தருளிய மும்மணிக்கோவை மிகவும் விழுமிய கருத்துக்களை யுடையது. அண்மையில் புலவர் சிகாமணியாக விளங்கிய மகாவித்வான் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை யவர்கள் பாடிய திருவிடைமருதூர் உலா மிகச் சிறந்த பிரபந்தமாகும்.

ஏகநாயகா:—

மூவரும் தேவரும் போற்றும் முழுமுதற் பரம்பொருள் முருகவேளே யாதலின "ஏகநாயகா" என்று அருளிச் செய்தனர்.

"இதழ்பொதி யவிழ்ந்த தாமரையின்
மணவறை புகுந்த நான்முகனு
மெறிதிரை யலம்பு பாலுததி நஞ்சராமேல்
இருவிழி துயின்ற நாரணனு
முமைமருவு சந்த்ர சேகரனு
மிமையவர் வணங்கு வாசவனு நின்றுதாமும்
முதல்வ" —திருப்புகழ்.

லோகநாயகா:— உலகங்களுக் கெல்லாம் தலைவன்.

கருத்துரை.

திருவிடைமருதூரில் எழுந்தருளிய திருமருகேசா! அடியேன் அவமே பிறந்து அழியாமல் அத்துவிதமுத்தி பெற்று உய்ய அருள்புரிவீர்.

ஓம் குஹாய நம

# கந்தரலங்காரம்

(௱௮௭-ம்பக்கத் தொடர்ச்சி.)

மாலோன் மருகனை மன்றாடி மைந்தனை வானவர்க்கு
மேலான தேவனை மெய்ஞ்ஞான தெய்வத்தை மேதினியிற்
சேலார் வயற்பொழிற் செங்கோ டனைச்சென்று கண்டுதொழ
நாலா யிரங்கண் படைத்தில னேயந்த நான்முகனே. (90)

## பதவுரை.

மாலோன்மருகனை - திருமாலின் திருமருகரை, மன்று ஆடி மைந்தனை - சபையில் திருநடனம்புரியும் சிவபெருமானுடைய புதல்வரை, வானவர்க்கும் மேலான தேவனை - தேவர்கட்கும் உயர்வாகிய தேவதேவரை, மெய் ஞான தெய்வத்தை - உண்மையறிவின் வடிவாகிய கடவுளை, மேதினியில் - மண்ணுலகில், சேல் ஆர் வயல் - கெண்டைமீன்கள் நிறைந்த வயல்களும், பொழில் - சோலைகளும் சூழ்ந்த, செங்கோடனை - திருச்செங்கோட்டில் எழுந்தருளியிருக்கும் முருகக்கடவுளை, சென்று கண்டு தொழ - அவருடைய திருக்கோயிலிற்போய் கண்குளிரக்கண்டு வணங்க, அந்த நான்முகன் - அந்த பிரமதேவன், நாலாயிரம் கண் படைத்திலனே - அடியேனுக்கு நாலாயிரங் கண்களைப் படைத்தானில்லையே?

## விரிவுரை.

### மாலோன் மருகனை —

மால்-பெருமை, அன்பு; பெருமையுடையவர் என்றும், அன்பின் வடிவினரென்றும் பொருள் படும். இனி மால் என்பதற்கு மேகம் என்ற ஒரு பொருளும் இருப்பதால் உவமை யாகுபெயராக மேகம் போன்றவர் எனினும் அமையும்.

உமாதேவியாரது சகோதரர் திருமால்; ஆதலின் முருகன் மால் மருகன் எனப்படுவர்; அன்றியும் திருமாலினது புதல்வியர்களாகிய அமுதவல்லி சுந்தர வல்லி யென்னும் இருவருமே தெய்வயானையாகவும், வள்ளியாகவும் அவதரித்து பெருமானை மணந்து கொண்டனர்.

"உலகீன்ற பச்சை யுமையண்ணன்
வடவேங் கடத்தி லுறைபவன்
உயர் சாரங்க சக்ர கரதலன் மருகோனே". —திருப்புகழ்.



திருமால் மிகவும் அழகிய திருமேனியுடையவர்; பச்சைமாமலை போன்ற மேனியில் பவளம் போன்ற அதரமும், தாமரை போன்ற கண்களும் காண்பார்க்கு மிகமிக இனிமையுடையதாக விளங்கும். அப்பெருமானுடைய பவள வாயைப் பார்க்குங் காதலினால் குலசேகர மன்னர் கூறுமாறு காண்க.

செடியாய வல்வினைகள் தீர்க்குந் திருமாலே
நெடியானே வேங்கடவா நின்கோயிலின் வாசல்
அடியாரும் வானவரும் அரம்பையருங் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்துன் பவளவாய்ப் பாரேனே.

இத்தகைய பேரழகுடைய திருமாலுங் கண்டு வியந்து நயந்து காமுறும் சிறந்த கட்டழகுடையவர் கந்தப்பெருமான்.

"பத்தர்க் கிரதத்தைக் கடவிய
பச்சைப்புயல் மெச்சத் தகுபொருள்"
"அரிமுகுந்தன் மெச்சுற்ற பண்பின் மருகோனே"

### மன்றாடி மைந்தனை:—

மன்று-சபை. கனகசபையில், அருள்ஞான வெளியில், மாதொரு பாகம்நோக்கி, ஆதியும் முடிவும் இல்லாத அற்புத ஆனந்தத் தாண்டவத்தை சிவபெருமான் புரிந்தருளுவர். அதனாலேயே அகிலாண்டங்களெல்லாம் அசைந்தாடுவனவாயின.

நடராஜ மூர்த்தியின் திருக்கரத்தில் உள்ள உடுக்கையில் படைப்பும், அபய திருக்கரத்தில் காப்பும், மழுவேந்திய திருக்கரத்தில் அழிப்பும், ஊன்றிய திருவடியில் மறைப்பும், தூக்கிய திருவடியில் அருளும் ஆக ஐம்பெருந் தொழிலுக்கும் ஆதாரம் சிற்சபையில் பெருமான் புரியும் அற்புதத் திருக்கூத்தேயாகும்.

அத்தகைய அருள்மயமாகிய நடராஜ மூர்த்தியைக் காண்பார்க்குப் பெருங் களிப்பு எய்தும். அவருடைய அழகு அகிலாண்டங்களையும் வசப்படுத்தும்.

அத்தனை முப்பத்து முக்கோடி தேவர்க் கதிபதியை
நித்தனை யம்மை சிவகாம சுந்தரி நேசனையெம்
கத்தனைப் பொன்னம் பலத்தாடு மையனைக் காணக்கண்கள்
எத்தனைக் கோடி யுகமோ தவஞ்செய் திருக்கின்றவே.

இங்ஙனம், "குனித்த புருவமும், கொவ்வைச் செவ்வாயிற் குமிண் சிரிப்பும், பனித்த சடையும், பவளம்போல் மேனியிற் பால் வெண்ணீறும், இனித்தமுடைய எடுத்த பொற்பாதமும்"

உடைய எம்பெருமானும் கண்டு காமுறத்தக்க பெருங் கவி னுடையவர் முருகக் கடவுள்.

"மன்றுதோ ருடிய வள்ளல் காமுறும்
குன்றுதோ ருடிய குமரற் போற்றுவாம்" —கச்சியப்பர்.

"கனகசபை மேவு மெனது குருநாத
கருணைமுருகேசப் பெருமாள்காண்" —திருப்புகழ்.

வானவர்க்கு மேலான தேவனே:—

தேவர்கள் யாவருக்கும் சிறந்தவர் முருகக் கடவுள்; மூவர் தேவாதிகள் தம்பிரான்; தேவர் சிறைதீர்த்த தேவதேவர்.

"தீர தீர தீராதி தீரப் பெரியோனே
தேவ தேவ தேவாதி தேவப் பெருமாளே"

மெய்ஞ்ஞான தெய்வத்தை:—

ஞானபண்டிதனும் திருவேலிறைவன் மெய்ஞ்ஞான மூர்த்தியாகும். ஞானகரசுர பாஸ்கரன்; ஞான பூரணன், ஞான தாதா; ஞானம் பெறவிரும்புவோர் ஞானபண்டிதனை உபாசிக்கவேண்டும்.

"மேதகு புராண வேதாங்குரன்
ஓதரிய மோன ஞானங்குரன்" —வகுப்பு.

சேலார் வயற் பொழில் செங்கோடன்:—

திருச்செங்கோடுவயல்களில் சேல்மீன்கள் உலாவுவதால் நீர்வளம் மிக்கது; அன்றியும் வயலில் உழவுத்தொழில் புரிவோர் உயிர்களிடத்தில் கருணையுடையவர். திருச்செந்தூரின் பெருமையைக் கூறவந்த விடத்தும் இங்ஙனமே கூறுகின்றனர்.

சேலொடு வாளை வரால்கள் கிளம்பித்
தாறுகொள் பூக மளாவிய இன்பச்
சீரலை வாய்நகர் மேவிய கந்தப் பெருமாளே"

"சேல்பட் டழிந்தது செந்தூர் வயற்பொழில்"

திருச்செங்கோடு மிகவும் சிறந்த திருத்தலம். அருணகிரிநாதர் அத்தலத்தைப் பலப்பல இடங்களில் பாராட்டுகின்றனர். ஒருதலத்தையுங் குறிக்காது பாடியருளிய மந்திர நூலாகிய கந்தரநுபூதியில் "நாகாசல வேலவ" என்று திருச்செங்கோட்டை மட்டும் சிறப்பித்துக் கூறுகின்றனர்.

மேலும் திருச்செங்கோட்டு முருகவேளைக் குறித்து கல்லுங் கனியக் கூறுமாறுகாண்க.

தெய்வத் திருமலைச் செங்கோட்டில் வாழுஞ் செழுஞ்சுடரே
வைவைத்த வேற்படை வானவனே மறவே னுனைநான்
ஐவர்க் கிடம்பெறக் காலிரண் டோட்டி அதிலிரண்டு
கைவைத்த வீடு குலையுமுன் னேவந்து காத்தருளே.

'பயந்ததனி வழிக்குத்துணைவடிவேலுஞ் செங்கோடன் மயூரமுமே'



"சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு வெற்பனை * * *
சாந்துணைப் போது மறவாதவர்க் கொரு தாழ்வில்லையே"

திருச்செங்கோட்டில் எழுந்தருளியுள்ள முருக மூர்த்தம் மிகவும் அழகுடையது. சிலையினாலாகிய வடிவமன்று. பழநி யாண்டவரைப்போலே நவபாஷாணங்களாலாயது. பழநி மூர்த்தி கிருஷ்ணம்; செங்கோட்டு மூர்த்தி சுவேதம்.

வாயுதேவனுக்கும் ஆதிசேடனுக்கும் வலிமை விஷயமாக வந்த விவாதத்தின் காரணமாக, ஆதிசேடன் மேருகிரியின் சிகரங்களைத் தனது பணமகுடங்களால் மறைத்து உறைத்து நின்றனன். வாயு அம்மேருகிரியின் மூன்று சிகரங்களைப் பறித்து எறிந்தனன். அவை கொங்கு நாட்டில் வந்து வீழ்ந்தன. ஒன்று திருச்செங்கோடு; ஒன்று கொடுமுடி; ஒன்று சென்னிமலை. இது முந்திய கற்பத்தில் நிகழ்ந்தது. திருச்செங்கோடு பாம்பு படமெடுத்து ஆடுவது போன்ற வடிவத்தில் விளங்குர். அங்கு அர்த்தநாரீச்சுரர்எழுந்தருளியுள்ளனர். "திருச்செங்குன்றூர்" என்றும் அதற்கு ஒருபெருண்டு. திருஞானசம்பந்த சுவாமி அங்கு எழுந்தருளியிருந்தபோது உண்டாகிய விஷ சுரப்பிணி யகலத் தேவாரம் பாடியருளினர்.

கண்டுதொழ நாலாயிரங்கண் படைத்திலனே
அந்த நான்முகனே:—

கண்பெற்றதன் பயனாக, "ஐந்து பேரறிவுங் கண்களே கொள்ள" செங்கோட்டு வேலவரைச் சென்று கண்குளிரக் கண்டு தொழுவதற்கு இவ்விரு கண்போதாது. முழுதுமழகிய முருகனைக் காண நாலாயிரங்கண்கள் அடியேனுக்குப் பிரம தேவன் படைத்தானில்லையே?

முருகா! கோடாத வேதனுக்கு யான் என்னகுற்றம் செய்தேன்? அடியார்கள் எல்லாம் உனது திருவடியைச் சென்னியிற் சூடுகின்றார்கள்; தொழுகின்றார்கள்; உனதுஅழகினை நாடுகின்றார்கள்; உனது புகழினைப் பாடுகின்றார்கள்; அடியேனுக்கு அந்த நான்முகன் திருவடியைச் சூடாத சென்னியும், நாடாத கண்ணும், தொழாத கையும், பாடாத நாவும் படைத்தனன். பெருமானே! நாயினேன் என்செய்வேன்" என்று அடிகள் இரங்கிக் கூறுகின்றனர்.

கோடாத வேதனுக் கியான்செய்த குற்றமென் குன்றெறிந்த
தாடாளனே தென் தணிகைக் குமரநின் தண்டையந்தாள்
சூடாத சென்னியும் நாடாத கண்ணுந் தொழாதகையும்
பாடாத நாவும் எனக்கே தெரிந்து படைத்தனனே.

கருத்துரை.

திருச்செங்கோட்டில் எழுந்தருளிய சேவ்வேட்பெருமானைச் சேவிப்பதற்குப் பல்லாயிரங் கண்கள் வேண்டும்.

முருகா

# மதிநலம்படைத்தமைந்தன்

(௱௯௮ம் பக்கத் தொடர்ச்சி)

அரசன் சபாமண்டபத்தில் மந்திரிகள் சூழ வீற்றிருந்தான். ஊரார்களும் இது என்ன ஆகுமோ என்று பவசேனனைத் தொடர்ந்து சென்றனர். கொலைஞர்பவசேனனை மன்னன் முன் நிறுத்தி, "அரசர் கோமானே! இவனைத்தானே கொல்லுமாறு கட்டளையிட்டீர்" என்று கேட்டார்கள். அரசன் மிகவும் சீறி, 'அறிவில்லாத கசடர்களே! இன்னுமா இவனைக் கொல்லவில்லை? மூடர்களே! முன்னமே ஏவலர்கள் மூலம் கூறினேனே ஏன் மறுபடியும் அழைத்துவந்தீர்கள்?' என்று வாய்மடித்து, பற்களைக் கடித்து, மீசைதுடித்து, பூமியைக் காலால் இடித்துக் கேட்டான்.

பவசேனன் பார்த்திபனைத்தொழுது, "கருணையேவடிவான காவலரே! உலகையாளும் உத்தமரே! ஒரு சிறுவிண்ணப்பம். அடியேன் கலைபயிலும் மாணவன். மனத்தாலும் வாக்காலும் காயத்தாலும் ஒருவருக்கும் ஒரு தீங்கும் செய்யாதவன். அடியேன் நாள்தோறும் அதிகாலையில் எழுந்து குளித்து வழிபாடு செய்து உணவுசெய்துவிட்டு தாயைவணங்கிக் கொண்டு பள்ளிக்குச் செல்வது வழக்கம். பாவியேன் இரவு அதிகநேரம் கண் விழித்துப் படித்தேன். அதனால் விடிவது தெரியாமல் அயர்ந்து தூங்கிவிட்டேன். ஆதலால் எழுந்தவுடன் தாயைக் கூட வணங்காமல் பள்ளிக்குப் புறப்பட்டு வந்தேன். தாயாரை வழக்கம்போல் வணங்கிவிட்டு வராத குற்றத்தால் இந்தவினை எனக்கு வந்திருக்கும் என்று உணர்கிறேன். வேறு ஒரு குற்றமும் யான் தங்கள் செங்கோல் அறியச் செய்ததில்லை. அப்படி செய்திருந்தாலும் சிறுதண்டனை விதிக்காமல் கொலைத் தண்டனை விதித்தீரே. நடுநிலை தவறாத நரபதியே! கொலைத் தண்டனை விதிக்கத்தக்க குற்றம் சிறியேன் யாது செய்தேன்? அதை வெளிப்படுத்தினால், இப் பெரிய கூட்டத்தில் அக்குற்றத்தை மற்றவர்கள் செய்யாமல் நல்வழிப் பட்டு உய்ய அனுகூலமாகும். ஆதலினால் தாயனைய தயாசாகரமே! என் குற்



றத்தைச் சபையறியக் கூறியருளும்" என்று கல்லும் கனியக் கழறினான். அவனுடைய சொற்சாதுரியத்தையும், பொருளாழத்தையும், இனிய முகப்பொலிவையுங் கண்ட அமைச்சரும் அவையினரும் பெரிய அதிசயமுற்று சித்திரப் பாவைபோல் அசைவற்று அரசன் முகத்தை நோக்கி இருந்தனர்.

மன்னன், "ஏ பாலகா! இன்று நான் காலை எழுந்தவுடன் வீதியை நோக்கியபோது, உன் முகத்தைப் பார்த்தேன். முகத்தை உட்பக்கம் திருப்பியவுடன் தலையில் அடிபட்டது. இதோபார் சிறிது உதிரங்கூட வடிந்துளது. எழுந்தவுடன் உன் முகத்தில் விழித்ததன் பயனாக தலைமண்டையில் அடிபட்டது. இதேபோல் நாள்தோறும் உன் முகத்தில் முதல்முதலாக விழித்து எத்தனை பேருக்கு அடிபட்டதோ? இனி ஒருவருக்கும் இம்மாதிரி துன்பம் நேராமல் இருக்கும் பொருட்டு உன்னைக் கொல்லுமாறு கட்டளையிட்டேன்" என்றான்.

பவசேனன் உள்ளுக்குள் சிரித்து, கரத்தைக் கூப்பி, "அறிவுமிக்க அரசே! தங்கள் கருணைத் திறத்தை உற்று நோக்கிப் பெரிதும் மகிழ்கிறேன். இப்பொழுதே என்னைக் கொன்றுபோட உத்தரவு கொடுங்கள். ஆனால் என்னைக் கொன்றவுடன் உங்களையுங் கொன்றுபோட உத்தரவு கொடுங்கள். தங்களுக்கும் கொலைத் தண்டனை இடவேண்டிய அவசியம் ஏற்பட்டுளது" என்று அஞ்சாமல் கூறினான். சபை திடுக்கிட்டது. மன்னவன் முகம் சிவந்தது. புருவங்கள் நெரிந்தன.

"அடா பாலகா! என்ன கூறினாய். எனக்குங் கொலைத்தண்டனை விதிக்கவேண்டுமா? ம்... என்ன?..." என்று கர்ஜித்தான்.

பவசேனன், "பார்த்திபரே! கோபம் வேண்டாம். உலக நன்மைக்காக நான் கூறினேன். தாங்களோ உலக நன்மையை விரும்புபவர்; நீதிநெறி தவறாதவர்; தருமாத்மா. தங்களுக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. அடிமை கூறியதைச் சற்று நிதானமாக யோசித்துப்பார்த்தால் தங்களுக்கு அதன்கருத்து நியாயமாகத் தெரியும்" என்றான்.

மன்னன், "மூடனே! என்ன நியாயம்? சீக்கிரம் சொல்" என்றான். பவசேனன், "உலகம்புரக்கும் உத்தமரே! என்முகத்தில் எழுந்தவுடன் தாங்கள் விழித்ததனால் தலையில் சிறிது அடிபட்டது. இதுபோல் இனி ஒருவருக்கும் என்னைப் பார்ப்பதனால் அடிபடாமல் இருக்கட்டும் என்ற கருணையால் என்னைக் கொல்லச் சொன்னீர். நிரம்பவும் நியாயம். சற்றுச் சிந்தித்துப் பாருங்

கள். அடியேன் இன்று எழுந்தவுடன் நேரம் கடந்துவிட்டபடியால் தாயைக்கூட வணங்காது பள்ளிக்கு ஓட்டமாக ஓடி வந்தேன்; வரும்வழியில் தங்களை மாடிமேல் கண்டேன்; தங்கள் கரத்தில் விளங்குஞ் செங்கோலின்மேல் ஆணையிட்டுக் கூறுகிறேன், முதன்முதலாக நான் தங்கள் முகத்தில் விழித்தேன்; இதன்பயனாக என் உயிருக்கே மோசம் வந்தது. என்முகத்தில் விழித்ததனால் தங்கட்குத் தலையில் சிறிது அடிபட்டது; தங்கள் முகத்தில் விழித்ததனால் என் தலையே போகின்றது. இனியும் இப்படி தங்கள் முகத்தில் முதன்முதலாக விழித்து எத்தனை பேருக்குத் தலை போகப்போகிறதோ? உலகில் உள்ள மற்றவர்க்கு அடிபடாமல் இருக்கும்பொருட்டு என்னைக் கொல்வது போல் உலகிலுள்ள மற்றவர்க்கு தலைபோகாமல் இருக்கும் பொருட்டு தங்களையும்......'' என்று மிகவும் சதுரப்பாடாகச் சொல்லும்போதே அவையில் ஒரு கலகலப்பு ஏற்பட்டது.

அரசன் எழுந்து அம் மதியுள்ளமகனைக் கட்டியணைத்தான். அரசனது மதியிலுள்ள மாசினை பவசேனனது சொற்களாகிய தண்ணீர் கழுவி யகற்றியது. திருந்திய அறிவு பெற்றான். அறிவுக்குப் பொருந்திய அப் புண்ணியக்கன்றின் சொற்கள் அவன் அறிவுக்கண்ணைத் திறந்துவிட்டது. "அப்பா! என் அறிவுள்ள அருமகனே! நினது கூர்த்த மதிநலத்தை மிகவும் பாராட்டுகின்றேன். பிள்ளையில்லாப் பாவியாகிய எனக்கு அறிவுப்பிள்ளையாக இதுமுதல் இரு. உன்னைப்போன்ற அறிவுடையபிள்ளையை எங்கும் காண்பது அரிது; அரிது. இன்றுமுதல் நீ என் மகன். உன்முகத்தில் முதல்முதல் விழித்ததன்பயனாக எனக்கு அறிவு வளமை யுற்றது'' என்றான்.

பவசேனன் மன்னன் கால்மேல் வீழ்ந்து, "அப்பா! முதல் முதலாக அடியேன் தங்கள் முகத்தில் விழித்ததன் பயனாக எனக்கு அரச பதவி கிடைத்தது'' என்று அருமையினும் அருமையாகக் கூறினான். எல்லோருங் கரகோஷம் செய்து வாழ்த்தினர். அக்காட்சியைக் கண்ட மங்கம்மாளுடைய மகிழ்ச்சி இமயமலைபோல் வளர்ந்தது. "மகனே'' என்று வாய் விட்டு அழைத்தாள். அரசன் அம் மாதரசியைப் பார்த்து, "தாயே இந்த நல்ல பிள்ளையைப் பெற்று, என்னிடம் தந்தனையே! நீ வாழ்க'' என்று கூறினான். மங்கம்மாளும் பவசேனனும் அதுமுதல் அரண்மனையில் அரசர் திருவுடன் இன்புற்றனர். உரிய காலத்தில் பவசேனனுக்குப் பட்டாபிஷேகம் நடந்தது. அறிவுடைய அவனுக்குப் பட்டங்கட்டியவுடன் உலகமெல்லாம் இன்புற்றது. வரிகள் குறைக்கப்பட்டன. சம்பளங்கள் உயர்த்தப் பெற்றன. எங்கும் அமைதி நிலவியது. அறக்கதிர் வீசியது; அருள் வெள்ளம் பரவியது. அன்புமயமாகியது.



